[10th March 1961]

SRI J. MATHA GOWDER: சட்டசபை உறுப்பினர்களிலே இருதார மணம் செய்துகொண்டவர்கள் யாராவது இருகிறார்களா? அப்படி இருந்தால் அவர்களை சட்டசபை உறுப்பினர் பதவியிலிருந்து நீக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை.

*Medical Education*

* 725 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to place on the Table of the House the recommendations of the Committees which were appointed to advise the Government on the patterns of schemes for medical education and training, and for the re-organization of the Public Health Laboratories and the King Institute, Guindy?

THE HON SRI M. A. MANICKAVELU: The report of the Expert Committee on Medical Education and Training Programmes is under consideration of the Government. The report of the Expert Committee on the re-organisation of the Public Health Laboratories and the King Institute, Guindy, is awaited.

*Artificial rain*

* 726 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலுள்ள பெருவாரியான வரண்ட பிரதேசங்களில் ஒலி அலைகளைக்கொண்டு செயற்கை மழை உற்பத்தி செய்ய உத்தேசமுண்டா?

(இ) அதிக மழை பெய்வதை செயற்கை முறை மூலம் கட்டுப்படுத்த மார்க்கம் உண்டா? அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No, Sir. Only seeding the clouds for producing artificial rain-making is being experimented. This too is under initial stages of trial.

(b) Not known. Nobody seems to have taken up any study in the matter.

SRI A. VEDARATHNAM: இந்த செயற்கை மழை விஷயத்தில் மற்றவர்கள் ஆராய்ச்சி செய்து பரீட்சை செய்து பார்ப்பதைவிட நாமே சொந்தமாக ஆராய்ச்சியில் ஈடுபட்டு, நம்முடைய திறமையை வெளிப்படுத்துவதற்கும், பொருள் அதிகமாக வீணாகாமல் இருப்பதற்கும் வழியாக இருக்குமே. ஆகவே அரசாங்கம் இந்தத் துறையிலே முயற்சி செய்வதற்கு முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நாமே பரிசீலனை செய்து வந்திருக்கிறோம். குறைந்த செலவில்தான் இந்த பரீட்சையை நடத்தி வருகிறோம். அதோடு அன்னிய நாடுகளில் நடத்தப்படும் பரீட்சையை எடுத்துக்கொண்டால் எனக்குத் தெரிந்தவரை அங்கேயும் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை.